ஓம்

தத்சத்

அநுகூலமாமுனிவர்

அருளிச்செய்த

# பரமானந்ததீபம்.

இஃது

ஸ்ரீகோயிலூர்

பொன்னம்பலசுவாமிகள்

முன்னிலையில்

பரிசோதித்த பிரதிக்கிணங்க,

சென்னை

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1921.

நெ-21, தாண்டவராயப்பிள்ளை வீதி.

உ

சிவமயம்.

ஸ்ரீசிவசற்குருவேநம:

அநுகூலமாமுனிவர்

அருளிச்செய்த

# பரமானந்ததீபம்

இஃது

ஸ்ரீகோயிலூர்

பொன்னம்பல சுவாமிகள்

முன்னிலையில்

பரிசோதித்த பிரதிக்கிணங்க,

சென்னை

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1931.

நெ-24. தாண்டவராயப்பிள்ளை வீதி.






ஸ்ரீ சற்குருவே நம:

# த்யாநாஷ்டகம்

சுலோகம்.

பரமானந்தம் பரமசுகிர்தம் கேவலம் க்யானமூர்த்தீம்
நிஸ்வாதீதம் ககனசதுர்ஸ்யம் தத்வமஸ்யாதி லக்ஷ்யம். (1)

ஏகம் நித்யம் விமல மசலம் சர்வதா சாட்சிபூதம்
பாவாதீதம் த்ரிகுண ரஹிதம் ஸ்ரீசற்குரும் நமாமி. (2)

தியானமூலம் குரோர்மூர்த்யம் பூசாமூலம் குரோர்ப்பதம்
மந்த்ரமூலம் குரோர்வாக்யம் முக்திமூலம் குரோர்கிருபா:

குருப்ரம்மம் குரோர்விஷ்ணு குருதேவ மஹேஸ்வர:
குருசாக்ஷாத் பரப்ரம்மம் தஸ்மை ஸ்ரீகுருவே நம: (4)

மன்னாதா ஸ்ரீஜகன்னாதா மகத்குரும் ஸ்ரீஜகத்குரும்
மமாத்மா சர்வபூதாத்மா தஸ்மை ஸ்ரீ குருவே நம: (5)

சைதன்யம் சாஸ்விதம் சாந்தம் வ்யோமாதீதம் நிரஞ்சனம்
நாதபிந்து களாதீதம் தஸ்மை ஸ்ரீகுருவே நம: (6)

பிரம்ம விஷ்ணுஸ்ய ருத்ரஸ்ய ஈஸ்வரஸ்ய சதாசிவ:
ஏகேகர்ப் யுகதஹேய தஸ்மை ஸ்ரீ குருவே நம: (7)

சர்வாத்மகம் ஸர்வஸமம் சச்சிதானந்த விக்ரஹம்
சர்வாதாரம் சர்வபூர்ணம் சதாநாராயணம் பஜே. (8)

---

இந்த த்யாநாஷ்டகத்தை, சந்திகாலங்களில் கிரமமாகத் தியானிப்பவர்கள் சகல பகை, பழிபாவங்களினின்றும் நீங்கி, இகபர யோக பக்தி சம்பன்னராய்ச் சுகித்திருப்பரென்பது சத்தியம். சுபம்.

## குருஸ்துதி.

கலிவிருத்தம்.

தாயினு மிரங்கியென் றனைவந் தாண்டருள்
தூயவன் சரணமே சுமக்க வென்றலை
வாய்துதி செயக்கர மலர்க டேய்த்தொழ
நேயமோ டநுதின நினைக நெஞ்சமே.

---

## ஆக்கியோன் பெயர் முதலின.

எண்சீராசிரிய விருத்தம்.

சீர்பெருகுந் தீர்த்தபுரி நந்தி கேசன்
திருக்கோயி னதிக்கடுத்த கீழ்ப்பா லாகப்,
பார்பெருகு மாதவத்தைப் புரிந்து மேவும்
பரிவுடைய வருகூல முனிவ னென்போ
னேர்பெருகுந் தமிழ்ப்பரமா னந்த தீப
மென்றுரைத்தா னிந்நூலை யோதி னோர்கள்
பேர்பெருகு சிவபெருமான் றுளைப் பற்றிப்
பேரின்ப வீட்டினைப் பெறுவர் தாமே.

---

ஸ்ரீ சிவசற்குருவேநமஃ

# பரமானந்ததீபம்

நேரிசை வெண்பா.

தந்தைதா யாவானுஞ் சார்கதியிங் காவானு
மந்தமிலா வின்பநமக் காவானு—மெந்தனுயிர்
தானகு வானுஞ் சரணகு வானுமருட்
கோனகு வானுங் குரு.

எண்சீராசிரிய விருத்தம்.

அஞ்செழுத்தி னுருவாகி யறிவு மாகி
யாதிநடு வீறாகி யநாதி யாகிச்
செஞ்சடையிற் கொன்றைதும்பை யணிந்தோ னாகித்
தேனாகிப் பாலாகிச் செகமே யாகி
மஞ்சுலவுங் குழலுமையோர் பாக னாகி
மகிழ்ச்சியுட னெனையாண்ட குருவு மாகி
வஞ்சமறத் தொழுமடியா ருளத்தின் மேவும்
வள்ளல்தனைப் புகழ்ந்தேத்தி வணங்கு வாமே. (1)

மாலயனு யுருத்திரனாய் மகேச னாகி
மன்னுசதா சிவமாகி வானே ராகிக்
கால்மொரு மூன்றினுமாய் முனிவோ ராகிக்
கனமுகற் பூதமெலா திகழு மாகிச்
சீலமுடன் றொழுமடியார்க் கெளியோ னாகித்
திரைகடலாய் மறைமுடிவாய்ச் சிறியேற் கன்பாய்
மேலுமருட் குருவடிவாய் வந்தாட் கொண்ட
மெய்ப்பொருளை யுளத்தில்வைத் துக்கருது வாமே. (2)

எவ்வுயிரு மெப்பொருளும் படைத்த கோமா
னெங்குமொன்றாய் நின்றிலங்கு செம்பொற் சோதி

யிவ்வுலகி லன்புடனே யர்ச்சித் தேத்து
மெளியோர்க ளனுதினமுங் கருதிச் செய்த
பவ்வமெலாம் பற்றறுக்குங் கருணைக் கண்ணன்
பார்ப்பதியோர் பாகம்வைத்த வேத நாதன்
திவ்வியபொற் றாளிரண்டுங் கருத்தில் நோக்கித்
தினந்தினமுந் துதித்திறைஞ்சிப் போற்று வாமே. (3)

எல்லார்க்கும் பரமசிவன் துணையா மாகில்
எவ்வுயிர்க்கு மவனருள்சேர்ந் திருக்கு மென்றே
பொல்லார்க்கு மியற்கைகெடப் புரிந்தி டாமற்
பொறிவழியில் மனம்பொருந்திச் சுழன்றி டாமல்
நல்லார்க்கும் பெரியவர்க்கு மெளியோ ருக்கும்
நாடோறு மிரக்கமுண்டாய் நடப்பா யாகில்
பல்லோர்க்கு முயிர்க்குயிரா யிருக்கு மெங்கோன்
பரிவினொடு கருணையருள் பாலிப் பானே. (4)

புலைகளொடு கொலைகளவு கட்கா மத்தைப்
புந்திதனிற் கருதாமல் நிற்பா யாகில்
மலைமகளோர் பாகனுந்தன் வசமாய் நிற்பான்
மாதவமு நிலைக்குமிந்த வழியில் லார்க்கு
அலைகடலிற் றுரும்பதுபோல் மனந்தள் ளாடும்
அறிவுதனக் காணிவரு மதுவல் லாமல்
நிலைதவறு மெழுபிறப்பும் நீங்கா தென்றே
நீணிலத்தி லருமறைக ளோது மாறே. (5)

ஆணவகா மியமாயை மலமோர் மூன்று
மடுத்தறிவைக் கெடுக்குமதை யடுக்கப் போமோ
சாணளவுக் கேறிவந்தால் முழத்துக் கப்பால்
தாழ்த்திவிட்டுத் தனக்காளாய்ப் படுத்திக் கொள்ளும்
வாணிபர்செய் தொழிலதுபோல் கருத்தால் நோக்கி
மலமூன்றும் பொசிப்பறவே நிற்பா யாகில்

ஆணவமும் மலமகனும் பரமா னந்த
வமுதருந்தி வாழ்ந்துசுகித் திருக்க லாமே. (6)

தன்னரசு நாடுவிட்டுக் காடு பாய்ந்து
தனித்தொன்றிப் பசுவாகிப் பாசத் தாலே
பொன்னைமண்ணைப் பெண்ணைநிதந் தேடித் தேடிப்
பொய்யுடலுக் கின்பதுன்பம் வேண்டி வேண்டி
மின்னனையார் கொங்கையைக்கண் டேங்கித் தூங்கி
விருப்புவெறுப் புற்றழிந்து விரகால் வெந்தே
தன்னுடைய பதியறியத் திறமில் லாமல்
தயங்கினர்க ளெண்ணிறந்த கோடி யாமே. (7)

மூந்நாளிற் றன்னைமறந் திச்சைக் காளாய்
மூலத்தி லாங்கார வடிவாய்த் தோன்றி
எந்நாளுந் திகைப்பூடு மிதித்தாற் போல
என்னதென்று மியாரென்று மிழிவுற் றேங்கித்
தன்னாலே தான்கெட்டால் மன்று ளாடுந்
தம்பிரா னென்செய்வா னவன்பொற் றாளைப்
பந்நாளும் பூசித்தால் குருவாய்த் தோன்றிப்
பக்குவத்தில் தன்னையறி விப்பா னென்றே. (8)

தொட்டிடமும் விட்டிடமுஞ் சொல்லிக் காட்டித்
தோற்றமொடுக் கம்மிரண்டும் விரித்துக் கூட்டிச்
சிட்டரிட பக்குவத்தைச் சுற்றிப் பார்த்துத்
திருவருளைக் கொடுக்கவல்லோ னுசா னுகும்
இட்டதொரு கட்டளைக்குப் பதில்சொல் லாம
லின்பதுன்ப மிரண்டினுக்கு மிடங்கொ டாமற்
சட்டமுடன் விட்டிடத்தில் நிட்டை யோகஞ்
சாதிக்கு முத்தமர்கள் சிட்ட ராமே. (9)

என்னதென்றும் யாரென்றும் விருப்புற் றென்று
மென்னுடலம் பருத்ததென்று மிளைத்த தென்றும்

தன்னுடலைத் தானென்று மதிக்கை யாலே
தன்மகன்ம மிருவினையுந் துணிவாய்த் தேடிப்
பின்னுமுட லெடுப்பதற்கே கர்த்தா வாகிப்
பிறவிவிடாய் கொண்டுழன்ற நெஞ்சே கேளாய்
நின்னுடலைப் பகுத்தறிந்து வேறாய்க் கண்டு
நின்னறிவைத் தானாக நேசிப் பாயே. (10)

அன்னை தந்தை துணைவர்சுற்றம் பெண்டீர் மக்க
ளச்சுமட்டம் தொட்டிமுத்த மாடு மாடு
நன்னிதியங் கன்னனுடன் செந்நெற் கெல்லாம்
நானெனதென் றலக்கணுற்றுக் கவலைக் காளாய்
என்னசென்ம மெடுத்தலுத்தாய் நெஞ்சே கேளாய்
இனியேனுஞ் சுருதியுக்தி நெறியூ டொன்றித்
தன்னையின்னா ரென்றறிந்தே யநுபோ கித்தால்
சம்சாரத் துக்கமெல்லாம் வெளியாங் காணே. (11)

முத்திபெறும் வழியாதோ யானா ரென்தன்
மூடபவந் தொலையும்வகை யாதோ வென்று
பத்தியுட னருட்குருவின் சந்நி தானம் [பாய்
பணிவிடைசெய் தொழுக்கமுண்டாய் விசாரித் தன்
உய்த்துணர்ந்து நடுவணையிற் கண்ப்போ தேனு
முற்றுளக்கண் மாறாமற் பார்த்தா யாகிற்
சத்தொடுசித் தானந்த வடிவா யெங்குந்
தானாகி நின்றபதம் பெறுவ தாமே. (12)

ஆவியுடற் பொருள்மூன்றுந் தத்த மென்றே
யருட்குருவின் சந்நிதியிற் சித்த மாக
மேவியளித் தறிவுண்மைப் பொருளைப் பற்றி
மெய்த்தவத்தின் மிக்கோராய் நிற்கு நல்லோர்
பாவையரோ டில்லறத்தில் வாழ்ந்திட் டாலும்
பரிவினொடுந் துறவறத்தோ டிருந்திட் டாலும்

பூவுலகி லொட்டியுமொட் டாமல் வேறாய்ப்
புளியோடு பழம்போலொத் திருப்பர் தாமே. (13)
சாதனமாஞ் சதுஷ்டயத்தின் விசாரத் தாலே
சந்தேக முள்ளதெல்லாந் தவறிப் போகும்
பேதமறப் பிரமமொன்றே நித்ய மென்றும்
பிரபஞ்ச மநித்யமென்று மறிந்தா யானால்
ஆதரவாய்ப் பரோக்ஷமென்ப ததுவே யாகும்
அபரோக்ஷ ஞானமென்ப தியாதோ வென்றாற்
காதலுடன் சொல்லாமற் சொல்லிக் காட்டுங்
காரணதே சிகனருளாற் பெறுவர் தாமே. (14)
ஒன்றாகி யொன்றினுக்குண் மூன்றுண் டாகி
ஒருமூன்றுக் கிருமூன்றா யதிலொன் றுக்குள்
விண்ணாகி யொன்றிலொன்றா யைந்துண் டாகி
விரிந்தவைந்தி லொன்றொன்றுக் கைந்தைந் தாகிப்
பெண்ணாகி யாணாகி நாணா வாகிப்
பிரிந்துலகீ ரேழாகிப் பிரமாண்ட மாகி
மண்ணாகி மண்இணைந்து மாறு மூன்றும்
வந்தவழி யேயொடுங்கி யொன்றாங் காணே. (15)
ஆவரணம் விக்ஷேப மவஸ்தை மாயை
யவைநான்கு முக்குணத்திற் செனித்த தாகும்
ஆவரண விக்ஷேப மவஸ்தை மாயை
யவைநான்கின் காரியங்கள் யாதோ வென்னில்
ஆவரண விக்ஷேப மவஸ்தை மாயை
யவைநான்கிற் சிவசீவன் செகத்துண் டாச்சு
ஆவரண விக்ஷேப மவஸ்தை மாயை
யவைநான்கு மிச்சையற்றோர்க் கில்லை தானே. (16)
இச்சையற்றோர்க் கின்பமில்லை துன்ப மில்லை
யிருவினையோ டிரவுமில்லை பகலுமில்லை

குட்சிதனக் கிரைதேடித் திரிவ தில்லை
குறைவுமில்லை நிறைவுமில்லை குலமோ யில்லை
சட்சமய வாதமில்லை பேத மில்லை
சங்கற்ப விகற்பமில்லை தானே தானாய்
அச்சமறச் சுகித்திருக்குஞ் சிசுவைப் போல
ஆனந்த விளையாட்டோ டிருப்பர் தாமே. (17)

துவக்கமுத லெழுதாதும் வாதித் தோங்கித்
தொல்லைவினைக் கீடாகித் தோற்றுங் காயங்
கவைக்குதவி யற்றபுழு மேச்சற் கூடாங்
கஸ்தியுறு மலமூத்ரக் கடமென் றெண்ணித்
தவத்துடையோ ருடல்தளர்ந்து நழுவா முன்னந்
தன்னுடலைப் பகுத்தறிவாற் றள்ளி யேறிப்
பவக்கடலைக் கடப்பதன்றிப் பிறந்தா ராகிப்
பவக்கடலிற் படிவர்களோ படிந்தி டாரே. (18)

சொற்பனத்தில் மலடிபிள்ளை பெற்றாற் போலுஞ்
சோரனென்று கட்டையைக்கண் டொளித்தாற் போலுஞ்
சர்ப்பமென்று பழுதையைக்கண் டயர்ந்தாற் போலுஞ்
சடத்தைமெய்யென் றறிவிழந்தோர் பிறந்தா ராகுஞ்
சொற்பனங்கண்டெழுந்துபொய்யென் றறிந்தாற்போலுஞ்
சோரனென்றோன் கட்டையிதென் றறிந்தாற்போலுஞ்
சர்ப்பமென்றோன் பழுதையிதென் றறிந்தாற் போலுஞ்
சடத்தைமித்தை யென்றறிந்தோன் ஞானியாமே (19)

ஆறாறு தத்துவத்தின் வகையே தென்று
லாக்கையெனுந் தூலமதி லிருமூன் றாகும்
ஈறாறு சூக்குமத்தி லிருப தாகு
மிசையான காரணத்துக் கோரைந் தாகுங்
கூறாறும் பூதமைந்துங் கூடக் கூட்டிக்
குலவுசிவ தத்துவமென் றோது நூல்கள்

வீருறு தத்துவங்கள் முப்பத் தாறும்
வேறாகக் கண்டறிவே சாட்சி யாமே. (20)
மண்ணிடத்திற் றோன்றுகின்ற கடத்தை நீக்கி
மண்ணென்று மதித்தறியில் மண்ணே யாம்போற்
றண்ணீரிற் றோன்றுகின்ற குமிழி தன்னைத்
தண்ணீராய் மதித்தறியில் தண்ணீ ராகும்
பொன்னிடத்திற் றோன்றுகின்ற வுடைமை தன்னைப்
பொன்னென்று மதித்தறியிற் பொன்னே யாம்போற்
றன்னிடத்திற் றோன்றுகின்ற சடத்தை நீக்கித்
தானென்ன வுணர்வறிவே சாட்சி யாமே. (21)
அஸ்தியுடன் மாமிசந்தோல் நரம்பு ரோம
மைந்துமுனக் கன்னியமா யிருக்கை யாலே
அஸ்தியுடன் மாமிசந்தோல் நரம்பு ரோம
மைந்துமூதற் பிரிதிவின் கூற தாகும்
அஸ்தியுடன் மாமிசந்தோல் நரம்பு ரோம
மைந்துவிதம் நீயறிவா யுவைநீ யல்ல
அஸ்தியுடன் மாமிசந்தோல் நரம்பு ரோம
மைந்திற்கு முயர்சாட்சி நீயாங் காணே. (22)
மூத்திரம்வாய் நீர்வேர்வை வுதிரம் விந்து
மூதலைந்து மன்னியமா யிருக்கை யாலே
மூத்திரம்வாய் நீர்வேர்வை வுதிரம் விந்து
மூதலைந்துஞ் சலத்தினிட கூற தாகும்
மூத்திரம்வாய் நீர்வேர்வை வுதிரம் விந்து
மூதலைந்தும் நீயறிவா யுவைநீ யல்ல
மூத்திரம்வாய் நீர்வேர்வை வுதிரம் விந்து
மூதலைந்துக் குயர்சாட்சி நீயாங் காணே. (23)
பசிதாக நித்திரைமை துன்ஞ்சோம்ப லைந்தும்
பகுத்தறியி லன்னியமா யிருக்கை யாலே

பசிதாக நித்திரைமை துனஞ்சோம்ப லேந்தும்
பகுத்தறியி னக்கினியின் கூற தாகும்
பசிதாக நித்திரைமை துனஞ்சோம்ப லேந்தும்
பகுத்தறியில் நீயறிவா யவைநீ யல்ல
பசிதாக நித்திரைமை துனஞ்சோம்ப லேந்தும்
பகுத்தறியி லுயர்சாட்சி நீயாங் காணே. (24)
ஓடலிருந் திடல்நடத்தல் படுத்தல் தாண்ட
லோரைந்து மன்னியமா யிருக்கை யாலே
ஓடலிருந் திடல்நடத்தல் படுத்தல் தாண்ட
லோரைந்து மாருதத்தின் கூற தாகும்
ஓடலிருந் திடல்நடத்தல் படுத்தல் தாண்ட
லோரைந்தும் நீயறிவா யவைநீ யல்ல
ஓடலிருந் திடல்நடத்தல் படுத்தல் தாண்ட
லோரைந்துக் குயர்சாட்சி நீயாங் காணே. (25)
இராகமொடு மோகவெட்கம் பயந்து வேஷ
மிவ்வையைந்து மன்னியமா யிருக்கை யாலே
இராகமொடு மோகவெட்கம் பயந்து வேஷ
மிவையைந்துங் ககனத்தின் கூற தாகும்
இராகமொடு மோகவெட்கம் பயந்து வேஷ
மிவ்வையைந்தும் நீயறிவா யவைநீ யல்ல
இராகமொடு மோகவெட்கம் பயந்து வேஷ
மிவையைந்துக் குயர்சாட்சி நீயாங் காணே. (26)
இசைநரம்பு துவக்குமயி ரெலும்பு வாய்நீர்
தன்னொடுசுக் கிலங்குருதி சிறுநீர் வேர்வை
பசிதாக மைதுனங்கண் ணுறக்கஞ் சோம்பல்
படுத்தலிருந் திடல்நடத்த லோடல் தாண்டல்
இசைபுகழி ராகமுச்சம் மோக வெட்கந்
துவேஷபய மிவ்வகைக ளிருபத் தைந்தும்

இசைபெறுமைம் பூதபஞ்சீ கரண தூல
மென்னுமுட லன்னமய கோசங் காணே. (27)

அன்னமய மென்பதுவே தூல தேக
மாகுமினிப் பிராணமய மனோம யத்தோ
டுன்னிவிஞ் ஞானமயத் துடனிம் மூன்று
முற்றதொரு சூக்கும சரீர மாகும்
பின்னுமா னந்தமய கோச மென்றும்
பெருகியகா ரணதேக மென்பர் மேலோர்
பன்னரிய வுடல்மூன்றுங் கோச மைந்தும்
பகுத்தறியு முயர்சாட்சி நீயாங் காணே. (28)

காரணசூக் குமதூல தேக மூன்றுங்
கண்டறியி லன்னியமா யிருக்கை யாலே
காரணசூக் குமதூல தேக மூன்றுங்
கண்டறியி லைங்கோச பாச மாகுங்
காரணசூக் குமதூல தேக மூன்றுங்
கண்டறியில் நீயறிவா யவைநீ யல்ல
காரணசூக் குமதூல தேக மூன்றுங்
கண்டறியி லுயர்சாட்சி நீயாங் காணே. (29)

கோசமைந்து மொவ்வொன்றாய்ப் பிரித்து வேறாய்க்
குறித்தறியி லன்னியமா யிருக்கையாலே
கோசமைந்து மொவ்வொன்றாய்ப் பிரித்து வேறாய்க்
குறித்தறியிற் பூதமைந்தின் கூற தாகும்
கோசமைந்து மொவ்வொன்றாய்ப் பிரித்து வேறாய்க்
குறித்தறியில் நீயறிவா யவைநீ யல்ல
கோசமைந்து மொவ்வொன்றாய்ப் பிரித்து வேறாய்க்
குறித்தறியி லுயர்சாட்சி நீயாங் காணே. (30)

ஞாதுருவி னொடுதோத்ரஞ் சமானன் வாக்கு
நான்குமுனக் கன்னியமா யிருக்கை யாலே

ஞாதுருவி னுடுதோத்ரஞ் சமானன் வாக்கு
நான்குமுதற் சத்தமதின் குணம தாகும்
ஞாதுருவி னுடுதோத்ரஞ் சமானன் வாக்கு
நான்குமுதல் நீயறிவா யவைநீ யல்ல
ஞாதுருவி னுடுதோத்ரஞ் சமானன் வாக்கு
நான்கினுக்கு முயர்சாட்சி நீயாங் காணே. (31)

மனதுதொக்கு வியானனுடன் பாணி நான்கும்
மதித்தறியி லன்னியமா யிருக்கை யாலே
மனதுதொக்கு வியானனுடன் பாணி நான்கும்
மதித்தறியிற் பரிசமதின் குணம தாகும்
மனதுதொக்கு வியானனுடன் பாணி நான்கும்
மதித்தறியில் நீயறிவா யவைநீ யல்ல
மனதுதொக்கு வியானனுடன் பாணி நான்கும்
மதித்தறியி லுயர்சாட்சி நீயாங் காணே. (32)

புத்திசட்சு வுதானனுடன் பாத நான்கும்
புகன்றறியி லன்னியமா யிருக்கை யாலே
புத்திசட்சு வுதானனுடன் பாத நான்கும்
புகன்றறியில் ரூபமதின் குணம தாகும்
புத்திசட்சு வுதானனுடன் பாத நான்கும்
புகன்றறியில் நீயறிவா யவைநீ யல்ல
புத்திசட்சு வுதானனுடன் பாத நான்கும்
புகன்றறியி லுயர்சாட்சி நீயாங் காணே. (33)

சித்தமொடு சிங்குவைய பானன் குய்யஞ்
செறிநான்கு மன்னியமா யிருக்கை யாலே
சித்தமொடு சிங்குவைய பானன் குய்யஞ்
செறிநான்கு மிரதமதின் குணமதாகுஞ்
சித்தமொடு சிங்குவைய பானன் குய்யஞ்
செறிநான்கும் நீயறிவா யவைநீ யல்ல

சித்தமொடு சிங்குவைய பானன் குய்யஞ்
செறிநான்குக் குயர்சாட்சி நீயாங் காணே. (34)
ஆங்கார மாக்ராணங் குதம் பிராண
னவைநான்கு மன்னியமா யிருக்கை யாலே
ஆங்கார மாக்ராணங் குதம் பிராண
னவைநான்குங் கந்தமதின் குணம தாகும்
ஆங்கார மாக்ராணங் குதம் பிராண
னவைநான்கும் நீயறிவா யவைநீ யல்ல
ஆங்கார மாக்ராணங் குதம் பிராண
னவைநான்குக் குயர்சாட்சி நீயாங் காணே. (35)
தோத்திரஞா தூருசமானன் வியானன் வாக்கு
தொக்குமனம் புத்திசட்சு வுதானன் பாணி
தேற்றுசித்த மாங்கார மபானன் பாதஞ்
சிங்குவையாக் கிராணகுதம் பிராணன் குய்யஞ்
சாற்றுமிவை ஐந்நான்கும் யாதோ வென்னிற்
றன்மாத்திர பஞ்சீகிருத குணம தாகும்
ஏற்றபஞ் சீகிருத சூக்கும பூத
மெனுமுடலுக் குயர்சாட்சி நீயாங் காணே. (36)
செவியுடம்பு கண்மூக்கு நாக்கு தாழ்வாய்
சென்னிகழுத் துதடுகன்னஞ் சிறுநீர் தாரை
குவிமுலைமார் பிடைதுடைதோள் வயிறு கைகால்
குண்டிதொப்பூழ் தசைநரம்பேர் டென்பு ரோமம்
இவைமுதற்கொண் டுடன்னதென்றே தன்ன தாக
வியம்பிலுனக் கன்னியமா யிருக்கை யாலே
இவையனைத்துந் தானல்ல சடமா மென்றே
யிசைந்தறியி லுயர்சாட்சி நீயாங் காணே. (37)
என்னுடைமை யென்பூமி யென்வே ளாண்மை
யென்வீடு யென்வாச லென்றுற் போலும்

என்னுடைய மனம்புத்தி யென்னுங் கார
மென்னுடல மென்பிராண னென்றுற் போலும்
உன்னுடைய காரியமா யிருக்கை யாலே
வுன்னையின்று றென்றறியா தவைநீ யல்ல
உன்னுடைய காரியங்க ளனைத்தும் வேறு
யுய்த்தறியி லுயர்சாட்சி நீயாங் காணே. (38)

தேகாதி பிரபஞ்ச நாம ரூபந்
தேர்ந்தறியி லன்னியமா யிருக்கை யாலே
தேகாதி பிரபஞ்ச நாம ரூபந்
தேர்ந்தறியில் பூதமைந்தின் கூற தாகுந்
தேகாதி பிரபஞ்ச நாம ரூபந்
தேர்ந்தறியில் நீயறிவா யவைநீ யல்ல
தேகாதி பிரபஞ்ச நாம ரூபந்
தேர்ந்தறியி லுயர்சாட்சி நீயாங் காணே. (39)

அணுத்திரண காஷ்டமுத லண்ட பிண்ட
மகண்டமெங்கு மன்னியமா யிருக்கை யாலே
அணுத்திரண காஷ்டமுத லண்ட பிண்ட
மகண்டமெங்கும் பூதமைந்தின் கூற தாகும்
அணுத்திரண காஷ்டமுத லண்ட பிண்ட
மகண்டமெங்கு நீயறிவா யவைநீ யல்ல
அணுத்திரண காஷ்டமுத லண்ட பிண்ட
மகண்டமெங்கு முயர்சாட்சி நீயாங் காணே. (40)

பிரிதிவப் புடன்தேயு வாய்வா காசம்
பிரிவைந்து மன்னியமா யிருக்கை யாலே
பிரிதிவப் புடன்தேயு வாய்வா காசம்
பிரிவைந்தும் விக்ஷேப சத்தி யாகும்
பிரிதிவப் புடன்தேயு வாய்வா காசம்
பிரிவைந்தும் நீயறிவா யவைநீ யல்ல

பிரிதிவப் புடன்தேயு வாய்வா காசம்
பிரிவைந்துக் குயர்சாட்சி நீயாங் காணே. (41)
சத்தபரி சம்ரூப ரசமுங் கந்தந்
தானைந்து மன்னியமா யிருக்கை யாலே
சத்தபரி சம்ரூப ரசமுங் கந்தந்
தானைந்தும் விக்ஷேப சத்தி யாகுஞ்
சத்தபரி சம்ரூப ரசமுங் கந்தந்
தானைந்தும் நீயறிவா யவைநீ யல்ல
சத்தபரி சம்ரூப ரசமுங் கந்தந்
தானைந்துக் குயர்சாட்சி நீயாங் காணே. (42)
சாக்கிரசொற் பனசுழுத்தி யவஸ்தை மூன்றுஞ்
சார்ந்தறியி லன்னியமா யிருக்கை யாலே
சாக்கிரசொற் பனசுழுத்தி யவஸ்தை மூன்றுஞ்
சார்ந்தறியில் விக்ஷேப சத்தி யாகும்
சாக்கிரசொற் பனசுழுத்தி யவஸ்தை மூன்றுஞ்
சார்ந்தறியில் நீயறிவா யவைநீ யல்ல
சாக்கிரசொற் பனசுழுத்தி யவஸ்தை மூன்றுஞ்
சார்ந்தறியி லுயர்சாட்சி நீயாங் காணே. (43)
ஆறாறு தத்துவமும் பெருக்கிப் பார்க்கி
லைவைந்தும் பிரமாண்ட மாகி நிற்கும்
பூறான பிரமாண்ட மதனைப் பார்க்கிற்
பூதமைந்துக் குள்ளாகி யொடுங்கிப் போகும்
வாறான பூதமைந்துஞ் சுருக்கிப் பார்க்கில்
வலிதான விக்ஷேபத் தொடுங்கிப் போகும்
வேறான விக்ஷேப சத்தி தானும்
விபுவான பிரமத்தே டொன்றிப் போமே. (44)
தானாகி நின்றிலங்கு மொன்றுக் குள்ளே
சராசரமெ லாந்தோன்றி யொடுங்கிப் போகும்

தானாகி நின்றிலங்கு மொன்றை விட்டாற்
சார்மனத்து வந்தவற்றைத் தள்ள மாட்டாய்
தானாகி நின்றிலங்கு மொன்றா மோன
சற்குருவின் சந்நிதியிற் காத்தா யானால்
தானாகி நின்றிலங்கு மொன்றோ டொன்றி
தற்சாட்சித் தானாகி வாழ லாமே. (45)

பத்திலட்சங் கோடிநந்நூ லாய்ந்தா லென்ன
பாரனைத்தும் வலம்புரியாய்ச் சூழ்ந்தா லென்ன
அத்தைவிட் டித்தைக்கைக் கொள்ளென் றுற்யோ
லாரணத்துட் பொருளையலோ வறிய வேணுந்
தத்துவத்தை நித்தநித்தம் பற்றிப் பார்த்துத்
தன்னையின்னா னென்றறிந்து பற்று நீங்கி
அத்துவிதந் தானாகி நிற்பா யாகி
லழியாத பேரின்பம் பெருகுந் தானே. (46)

மந்திரங்காற் பங்குமதி மூக்காற் பங்கும்
வந்தடுத்தால் மாதவத்தோர் தங்கட் கெல்லாஞ்
சந்திரனுஞ் சூரியனும் நேரிட் டாப்போல்
தற்சொரூபப் பிரகாசம் வெளியாய்த் தோன்றும்
எந்திரங்க ளெழுதிவைத்துப் பூசித் தென்ன
வெண்ணரிய நூல்கள் முற்றும் வாசித் தென்ன
தந்திரத்தாற் றன்னைநன்றா யறிய வேணுந்
தனையறிந்தாற் றலைவனையு மறிய லாமே. (47)

நாடறிந்த பார்ப்பார்க்குப் பூணு நூல்கள்
நடுமார்பி லிருந்தென்ன னிராதே லென்ன
வீடறிந்த பார்ப்பார்க்குத் திருவே டங்கள்
மேனிதனி லிருந்தாலென் னிராமற் போயென்
பாடறிந்து பாடிட்டாற் பலனுண் டாகும்
பாட்டறியார் தங்களுக்கே கேடென் றுற்போற்

கூடறிந்து குடியிருந்தே சுகித்தோர்க்கெல்லாங்
 கூற்றன்வந்து பிடித்தடித்துக் கொல்லா னன்றே.(48)
இல்லாத மாயைதனை யுண்டென் றெண்ணி
 யிருவினையைப் புரிந்தவந்த நெறியே நின்று
செல்லாத காசதுபோல் நாளு பேதச்
 செனனவா ரிதியிலுழன் றலைவ தெல்லாம்
பொல்லாத மனத்தினிட செயலென் றெண்ணிப்
 பொருந்தறியார்க் கிப்புவியிற் பலனே தென்றாற்
கல்லான நெஞ்சுடைய நமன்கை பட்டுக்
 கலங்குவதே கைகண்ட பலனு மென்றே. (49)
இச்சைக்கு வித்தான மனதைப் பற்றி
 யிழுத்துவந்து மூலத்தில் நிறுத்திக் கொண்டு
எச்சரிக்கை யாகநித்தம் லயிக்கப் பாரு
 மெண்ணிறந்த கன்மமெல்லாம் வெண்ணீ றாகும்
நிச்சயித்துப் பாரம்ம லுண்டித் தீயால்
 நீணிலத்திற் பாஷாண்டி வேஷம் பூண்டு
பிச்சையெடுத் துண்டாலும் பிறப்பும் போமோ
 பிச்சையிட்டோர்க் கருள்வீடு பெருகுந் தானே. (50)
ஆங்காரப் புனத்தைவெட்டிச் சுட்டு நீற்றி
 யாட்கொண்ட குருபதத்தை நிதமும் போற்றி
நீங்காமல் நாசிநுனி நடுவில் நோக்கி
 நீட்டைபுரிந் தறிவுருவாய் நிற்பா யாகில்
தேங்காத வானந்த வெள்ளந் தேங்குந்
 தெள்ளமுத முண்டாற்போ லுள்ளம் பொங்குந்
தீங்கான பிறவிவிடா யுடனே நீங்குஞ்
 சித்தமென்று நூற்பலவுஞ் செப்புந் தானே. (51)
உடல்பொருளா வியுமுடனே தன்ன தாக
 வுகந்தடிமை கொண்டபிரான் றனைப் போற்றி

அடைவுடனே மெய்ஞ்ஞான நூற்க ளாய்ந்து
வறியபர மானந்த தீப மென்றே
திடமுறவே யுரைத்ததமி ழைம்பத் தொன்றுந்
தினந்தோறுங் கற்றுணர்ந்து விசாரித் தோர்கள்
மடமையெனும் பசுபாச வறிவு நீங்கி
மன்னுபதி யொடுங்கூடி வாழ்வர் தாமே. (52)

தூலவுட னீயல்ல வென்று போனாற்
றெருந்தசட் பாவகவி காரங்க ளேது
தூலவுட னீயல்ல வென்று போனாற்
றெருந்தமாம் மானபி மான மேது
தூலவுட னீயல்ல வென்று போனாற்
றெருந்தகுல கோத்திரவ ஜாதி யேது
தூலவுட னீயல்ல வென்று போனாற்
றெருந்தாதிக் குயர்சாட்சி நீயாங் காணே. (53)

சமட்டியாந் தூலசரீ ரத்தை நன்றாய்ச்
சார்ந்தறியி லன்னியமா யிருக்கை யாலே
சமட்டியாந் தூலசரீ ரத்தை நன்றாய்ச்
சார்ந்தறியி லீன்றதுவே பஞ்ச பூதஞ்
சமட்டியாந் தூலசரீ ரத்தை நன்றாய்ச்
சார்ந்தறியில் நீயறிவா யதுநீ யல்ல
சமட்டியாந் தூலசரீ ரத்தை நன்றாய்ச்
சார்ந்தறியு முயர்சாட்சி நீயாங் காணே. (54)

ஸூக்மவுட னீயல்ல வென்று போனாற்
றெருந்தயலா பலபசியா திகடா னேது
ஸூக்மவுட னீயல்ல வென்று போனாற்
றெருந்தமாஞ் சத்தவச ஜாதி யேது
ஸூக்மவுட னீயல்ல வென்று போனாற்
றெருந்தமாஞ் சல்லியா காதி யேது

சூக்மவுட நீயல்ல வென்று போனாற்
றெந்தங்கட் குயர்சாட்சி நீயாங் காணே. (55)
சர்வவிந் திரியகர ணம்பி ராணன்
சார்ந்தறியி லன்னியமா யிருக்கை யாலே
சர்வவிந் திரியகர ணம்பி ராணன்
சார்ந்தறியின் மாத்திரையே யீன்ற தாகுஞ்
சர்வவிந் திரியகர ணம்பி ராணன்
சார்ந்தறியில் நீயறிவா யதுநீ யல்ல
சர்வவிந் திரியகர ணம்பி ராணன்
சார்ந்தறியு முயர்சாட்சி நீயாங் காணே. (56)
சமட்டியாஞ் சூக்கும சரீரந் தன்னைச்
சார்ந்தறியி லன்னியமா யிருக்கை யாலே
சமட்டியாஞ் சூக்கும சரீரந் தன்னைச்
சார்ந்தறியி லீன்றதுவே சூக்ம பூதஞ்
சமட்டியாஞ் சூக்கும சரீரந் தன்னைச்
சார்ந்தறியில் நீயறிவா யதுநீ யல்ல
சமட்டியாஞ் சூக்கும சரீரந் தன்னைச்
சார்ந்தறியு முயர்சாட்சி நீயாங் காணே. (57)
மூலவுட னீயல்ல வென்று போனால்
மூரண்மேவு மறிவறியா மைகடா னேது
மூலவுட னீயல்ல வென்று போனால்
மூரண்பிரிய மோதபிர மோத மேது
மூலவுட னீயல்ல வென்று போனால்
மூரண்மூட சடசூனி யன்று மேது
மூலவுட னீயல்ல வென்று போனால்
மூரணுதிக் குயர்சாக்ஷி நீயாங் காணே. (58)
சமட்டிகா ரணசரீ ரத்தை நன்றாய்ச்
சார்ந்தறியி லன்னியமா யிருக்கை யாலே

சமட்டிகா ரணசரீ ரத்தை நன்றாய்ச்
சார்ந்தறியில் விக்ஷேப மீன்ற தாகுஞ்
சமட்டிகா ரணசரீ ரத்தை நன்றாய்ச்
சார்ந்தறியில் நீயறிவா யதுநீ யல்ல
சமட்டிகா ரணசரீ ரத்தை நன்றாய்ச்
சார்ந்தறியு முயர்சாட்சி நீயாங் காணே. (59)

விசுவதைச் சதபிராக் ஞனையே நன்றாய்
விசாரிக்கி லந்நியமா யிருக்கை யாலே
விசுவதைச் சதபிராக் ஞனையே நன்றாய்
விசாரிக்கி லிராசதத்திற் செனித்த தாகும்
விசுவதைச் சதபிராக் ஞனையே நன்றாய்
விசாரிக்கில் நீயறிவா யதுநீ யல்ல
விசுவதைச் சதபிராக் ஞனையே நன்றாய்
விசாரிக்கி லுயர்சாட்சி நீயாங் காணே. (60)

இவ்வுடல்க ளவத்தையபி மானி யாதி
யிவையன்றேற் புண்ணியபா வாதி யில்லை
இவ்வுடல்க ளவத்தையபி மானி யாதி
யிவையன்றேற் சுவர்க்கநர காதி யில்லை
இவ்வுடல்க ளவத்தையபி மானி யாதி
யிவையன்றேற் பந்தமோ க்ஷங்க ளில்லை
இவ்வுடல்க ளவத்தையபி மானி யாதி
யிவைகளினுக் குயர்சாட்சி நீயாங் காணே. (61)

விராட்டாதி சரீரங்கண் மூன்று மூன்றில்
விசாரிக்கி லன்னியமா யிருக்கை யாலே
விராட்டாதி சரீரங்கண் மூன்று மூன்றில்
விசாரிக்கின் முக்குணத்திற் செனித்த தாகும்
விராட்டாதி சரீரங்கண் மூன்று மூன்றில்
விசாரிக்கில் நீயறிவா யதுநீ யல்ல

விராட்டாதி சரீரங்கண் மூன்று மூன்றில்
விசாரிக்கி லுயர்சாட்சி நீயாங் காணே. (62)
சிருஷ்டிதிதி சங்கார வவத்தை மூன்றுந்
தேர்ந்தறியி லங்கியமா யிருக்கை யாலே
சிருஷ்டிதிதி சங்கார வவத்தை மூன்றுந்
தேர்ந்தறியிற் பிரமாதி தொழில தாகுஞ்
சிருஷ்டிதிதி சங்கார வவத்தை மூன்றுந்
தேர்ந்தறியில் நீயறிவா யதுநீ யல்ல
சிருஷ்டிதிதி சங்கார வவத்தை மூன்றுந்
தேர்ந்தறியு முயர்சாட்சி நீயாங் காணே. (63)
பிரமனொடு விட்டுணுருத் திரனை யூன்றிப்
பிரித்தறியி லங்கியமா யிருக்கை யாலே
பிரமனொடு விட்டுணுருத் திரனை யூன்றிப்
பிரித்தறியிற் சத்துவமே யீன்ற தாகும்
பிரமனொடு விட்டுணுருத் திரனை யூன்றிப்
பிரித்தறிவில் நீயறிவா யதுநீ யல்ல
பிரமனொடு விட்டுணுருத் திரனை யூன்றிப்
பிரித்தறியு முயர்சாட்சி நீயாங் காணே. (64)
விராட்டாதி யவத்தையபி மானி யீறாய்
வேறதனுன் முக்கியசட் குணங்க ளில்லை
விராட்டாதி யவத்தையபி மானி யீறாய்
வேறதனுற் பிரபுத்துவ வலியே யில்லை
விராட்டாதி யவத்தையபி மானி யீறாய்
வேறதனு லட்டகுணங் களுமே யில்லை
விராட்டாதி யவத்தையபி மானி யீறாய்
வேறதனு லுயர்சாட்சி நீயாங் காணே. 65
சீவனீ சுரன்ஜகத்திம் மூன்றை யுந்தான்
றேர்ந்தறியி லங்கியமா யிருக்கை யாலே

சிவனீ சுரன்ஜகத்திம் மூன்றை யுந்தா
னோர்ந்தறியின் முக்குணத்திற் செனித்த தாகுஞ்
சிவனீ சுரன்ஜகத்திம் மூன்றை யுந்தா
னோர்ந்தயில் நீயறிவா யதுநீ யல்ல
சிவனீ சுரன்ஜகத்திம் மூன்றை யுந்தா
னோர்ந்தறியு முயர்சாட்சி நீயாங் காணே (66)
சத்துவமோ டிராசதமோ குணங்கண் மூன்றுஞ்
சார்ந்தறியி லந்நியமா யிருக்கை யாலே
சத்துவமோ டிராசதமோ குணங்கண் மூன்றுஞ்
சார்ந்தரியிற் பிரகிருதி யீன்ற தாகுஞ்
சத்துவமோ டிராசதமோ குணங்கண் மூன்றுஞ்
சார்ந்தறியில் நீயறிவா யதுநீ யல்ல
சத்துவமோ டிராசதமோ குணங்கண் மூன்றுஞ்
சார்ந்தறியு முயர்சாட்சி நீயாங் காணே (67)
ஆதியாம் மூலப்ர கிருதி யைத்தா
னாயுங்கா லன்னியமா யிருக்கை யாலே
ஆதியாம் மூலப்ர கிருதி யைத்தா
னாயுங்கா லுன்னிடத்தே விவர்த்த மாகும்
ஆதியாம் மூலப்ர கிருதி யைத்தா
னாயுங்கால் நீயறிவா யதுநீ யல்ல
ஆதியாம் மூலப்ர கிருதி யைத்தா
னாய்ந்தறியு முயர்சாட்சி நீயாங் காணே (68)
ஆதியா மூலப்ர கிருதி யோடே
யான்திரி குணமகதத் துவமாங் காரம்
ஆதியா மாத்திரையும் பஞ்ச பூத
மானசரா சரமுதலாய் மற்று மெல்லாம்
ஆதியா மப்பதனைத் தவிர வேறு
யானதிரை நுரைதிவலை குமிழி யில்லை

ஆதியாம் பிரமமா முன்னின் வேறு
யானவைக ளணுவுமிலை யெல்லா நீயே. (69)
பழுதையா டகமதிலே செனித்த தான
பணிமகுட கேயூர குண்ட லாதி
பழுதையா டகமதனைத் தவிர வேறோர்
பாரதனி லீதுபோற் செனியா நின்ற
பழுதிலறி வுண்மையா னந்த நித்த
பரிபூர ணப்பிரம சொரூபந் தன்னிற்
பழுதுளவாஞ் சீவே சுரஜ கத்தும்
பரிபூர ணப்பிரம மாகுந் தானே. (70)
நித்தியமே சம்பூர்ணப் பரமா னந்த
நிமலகே வலபரதத் துவசத் தார்ந்தஞ்
சுத்தபரப் பிரமமவச் சின்ன சீவ
சுயந்துரிய கூடத்த சாட்சி போதஞ்
சத்தியசஞ் சலரகித நிட்பிர பஞ்சஞ்
சருவசமஞ் சாந்தசூக் குமமே முத்தம்
புத்தநிதா னந்தத்துவ விபுவான் மாநீ
புத்திரனே நீயதுவா யாகு வாயே. (71)
நிர்க்குண னந்தபரப் பிரம நானே
நிருலேப ஜகசீவ பரமு நானே
நிர்த்தோட வப்ரமே யனுமே நானே
நிருபத்திர வசரீர தானு நானே
நிர்ச்சம்பந் தனசல னணுவு நானே
நிரிந்திரிய வப்பிராண சிவனு நானே
நிர்ச்சீவ நிர்விகா ரமுமே நானே
நிர்விடைய கண்டமிலாம் நானே நானே. (72)

பரமானந்த தீபம் முற்றிற்று.